POST WITHOUT PRE-PAYMENT LICENCE NO. G. 6. TN. MS. C. P. P. 55

ANNA Leading Progressive Tamil Daily of the people

# பெரியவர் அமரரானார்

Regd. No. TN - MS [C] 244 Phone: 420212 4 பக்கம் விலை 60 காசு

அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

மலர் 10] சென்னை 18-8-1986 திங்கள் :- வெளியூர் 19-8-1986 செவ்வாய் [இதழ் 297

## புரட்சித்தலைவர் கண்ணீர்விட்டு கதறல்

## லட்சக்கணக்கானமக்கள் அஞ்சலி செலுத்தினர்

**சென்னை ஆக. 18- முதல்வர் புரட்சித் தலைவரின் சகோதரர் பெரியவர் அவர்கள் காலமானார் என்பதை ஆழ்ந்த வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்கிறோம்.**

### கவர்னர் குரானா அஞ்சலி

காலை 9-15 மணிக்கு கவர்னர் குரானா வந்தார். வாசலில் இருந்த முதல்வர் புரட்சித்தலைவரை கட்டி பிடித்து ஆறுதல் கூறினார் பின்னர் பெரியவரின் உடலுக்கு மலர் வளையம் வைத்து அஞ்சலி செலுத்தினார்.

### அண்ணா துணைவியார் அஞ்சலி

பெரியவர் உடலுக்கு மலர்வளையம் வைத்து பேரறிஞர் அண்ணாவின் துணைவியார் அஞ்சலி செலுத்தினார்.

12-55க்கு பேரறிஞர் அண்ணாவின் துணைவியார் ராணி அம்மையார் 2 மருமகள்களுடன் வந்தார்.

பெரியவரின் உடலுக்கு மலர்வளையம் வைத்து அஞ்சலி செலுத்தினார்,

முதலவர் புரட்சித் தலைவருக்கு ராணி அம்மையார் ஆறுதல் கூறினார்.



### இன்று உடல் தகனம்

பெரியவரின் உடல் தகனம் இன்று மாலை நடை பெறுகிறது.

மாலை 4 30 மணிக்கு அவ்வைசண்முகம் சாலையில உள்ள அவரது வீட்டில் இருந்து இறுதி ஊர்வலம் புறப்படுகிறது.

ஐ ஜி ஆபீஸ் பின்புறம் உள்ள கிருஷ்ணாம் பேட்டை மயானத்தில் உடல் தகனம் செய்யப்படுகிறது.

சிதைக்கு பெரியவரின் மூத்த மகன் ராமமூர்த்தி தீ மூட்டுகிறார்,

**பெரியவர் எம் ஜி சி உடலுக்கு ஏராள மானவர்கள் மலர் வளையம் வைத்து அஞ்சலி செலுத்தினா.**

### புரட்சித் தலைவர் கண்ணீர் அஞ்சலி

காலை 7-50-க்கு முதல்வர் புரட்சித்தலைவர் தனது துணைவியார் ஜானகி அம்மையாருடன் வந்தார்.

பெரியவரின் உடலுக்கு ரோஜா மாலை வைத்து கண்ணீர் அஞ்சலிசெலுத்தி கைகூப்பி வணங்கினார்,

பெரியவரின் துணைவியார் மீனாட்சி அம்மாள் மகன்கள் ராமமூர்த்தி, பிரபாகரன் சந்திரன், சுகுமார் ராஜேந்திரன்பாலு, விஜயன் மற்றும மகள்கள் சத்தியபாமா, லீலாவதி ஆகியோரும, முதலவர் புரட்சித் தலைவரை கண்டவுடன் கதறி அழுதனர்.

முதல்வர்புரட்சித்தலைவர் அவர்களுக்கு ஆறுதல் கூறினார்.

காலை 8-15 மணிக்கு சிவாஜிகணேசன் வந்தார் பெரியவரின் உடலைக் கண்டவுடன அவர் கதறி அழுது மலர் வளையம் வைத்து அஞ்சலி செலுத்தினார்.

பின்னர் முதல்வர் புரட்சி தலைவரை கட்டிபிடித்து ஆறுதல கூறினார்.

கலையுலகில் ஏறத்தாழ 60 ஆண்டுககாலம் பணியாற்றியவரும், அனைவராலும் பெரியவர் என அன்புடன் அழைக்கப்பட்டு வந்த வருமான பெரியவர் எம். ஜி. சி. நேற்றிரவு 11 மணிக்கு காலமானார்.

சிறிது காலமாக உடல் நலமின்றி இருந்தபெரியவா சென்னையில் உள்ள "வெலிங்டன நர்சிங் ஹோம்" என்ற தனியார் ஆஸ்பத்திரியில் அனுமதிக்கப்பட்டு கடந்த 10 நாட்களாக சிகிச்சைபெற்று வந்தார்.

நேற்று அவரது உடல் நிலை மோசமடைந்தது இரவு 11 மணிக்கு பெரியவர் அமரர் ஆனார்.

உயிர் பிரியும் போது அருகில் முதல்வர் புரட்சித் தலைவர் அவரது துணைவியார் ஜானகி அம்மையார் பெரியவரின் துணைவியார் மீனாட்சி அம்மாள் மற்றும் மகன்கள், மகள்கள் அருகில் இருந்தனர்.

பின்னர் பெரியவரின் உடல் ராயப்பேட்டை லாயிட்ஸ் ரோடில் உள்ள அவருடைய வீட்டிற்கு கொண்டுபோகப்பட்டு அங்குமக்கள் அஞ்சலிக்காக வைக்கப்பட்டது

பெரியவர் காலமான செய்தியறிந்தவுடன்ஏராளமான கழகத்தோழர்கள். கலையுலகின்ர் மற்றும் பொதுமக்களவந்து இறுதி அஞ்சலி செலுத்தினர்.

இன்று காலைமுதல் மக்கள் நீண்ட வரிசையில் காத்திருந்து அஞ்சலி செலுத்தினர்.

"எனது மூத்த அண்ணனை இழந்து தவிக்கிறேன. அண்ணனை இழந்து தவிக்கும் முதல் வருக்கும் அவர்களின் குடும்பத்திற்கும எனது அனுதாபத்தை தெரிவித்து கொள்கிறேன்" எனசிவாஜி கணேசன் கூறினார்.



பெரியவர் உடலுக்கு வளையம் வைத்து அஞ்சலி முதல்வர் புரட்சித்தலைவர் கவர்னர் குரானா மலர் செலுத்தினார். அருகில் உள்ளார்.

நளினி நாகேஷ், நம்பியார், விஜயகுமாரி, என். நம்பியார் வி. எஸ். ராகவன், மற்றும் கவிஞர் முத்துலிங்கம் பெரியவர் சங்கராபா ஆகியோரும் இறுதி அஞ்சலி செலுத்தினா.

### பெரியவரின் வாழ்க்கை வரலாறு

சென்னை, ஆக. 18— காலஞ்சென்ற பெரியவர் கலையுலகில் நீண்டகாலமாக பணியாற்றியவர் ஆவார்.

கலையுலகினரால் பெரியவர் என அன்புடனும். பாசத்துடனும் அழைக்கப்பட்டுவந்த பெரியவர் எம்,ஜி.சி கேரள மாநிலம் பாலக்காடு அருகில் உள்ள வடவனூர் என்ற இடத்தில் 1911-ம் ஆண்டு ஜனவரி மாதம் பிறந்தார்.

இவரது மனைவி மீனாட்சி அம்மாள் இவருக்கு 7 மகன்களும் 3 மகள்களும உள்ளனர்.

பழம்பெரும் நடிகரான பெரியவர் எம்,ஜி சி என் தங்கை அலிபாபாவும 40 திருடர்களும், மலைக் கள்ளன் நாடோடி மன்னன ஜெனோவா, நாம் போன்ற படங்கள் உள்பட 100-க்கும் மேற்பட்ட படங்களில் நடித்து இருக்கிறார். பல படங்களையும் தயாரித்து உள்ளார்.

1972ம் ஆண்டு கழகம் தொடங்கியபோது கட்சி நிர்வாகப்பணிகளுக்கு உறுதுணையாக இருந்தார்.

புரட்சித் தலைவர் முதல்வராகபொறுப்பேற்றபிறகு "அண்ணா" நாளிதழின் ஆசிரியராகவும் சிறிது காலம் இருந்தார்.

### அமைச்சர்கள் அஞ்சலி

அமைச்சர்கள் டாக்டர் நாவலர், பண்ருட்டியார், பு உ ச பொன்னையன், அண்டே முத்துசாமி திருநாவுக்கரசு ஹண்டே ஜகதீசன் கோமதி சீனிவாசன விஜயலட்சுமி பழனிசாமி மேலவைதலைவர் ம பொ சி சபாநாயகர் பி.எச். பாண்டியன் முன்னாள் அமைச்சர் கே ஏ கே செரீப் சரவணன், ஏ சி. சண்முகம எம்.பி. டி ராமானுஜம், தலைமைச்செயலாளர் பதமநாபன் ஆகியோர் இறுதி அஞ்சலி செலுத்தினர்.

### இராகவானந்தம் அஞ்சலி

தலைமைக்கழகத்தின் சார்பில் பொதுச்செயலாளர் இராகவானந்தம் மலர் வளையம் வைத்து அஞ்சலி செலுத்தினார்.

"அண்ணா" நாளிதழ் ஆசிரியர் இயக்குநர் அரவிந்தன், தலைமை முகவர் பொறுப்பாளர் துறைராசன் சாமிநாதன, தண்டபாணி சத்யா ஸ்டுடியோவைச் சேர்ந்த பதமநாபன் அரிச்சந்திரன், ஆகியோர் மலர் வளையம் வைத்து அஞ்சலி செலுத்தினர்.

கலையுலகைச் சேர்ந்த பி. எஸ். வீரப்பா,

### 3 நாட்கள் துக்கம

பெரியவரின் மறைவையொட்டி கழகத்தின் சார்பில் 3 நாட்கள் துக்கம் அனுஷ்டிக்கப்படும் என கழக பொதுச் செயலாளர் இராகவானந்தம் அறிவித்துள்ளார்

கழகக் கொடிகள் 3 நாட்களுக்கு அரைக்கம்பத்தில் பறக்க விடப்படும் எனவும் அறிவித்துள்ளார்.

பெரியவரின இல்லம் உள்ள அவ்வை சண்முகச் சாலையில் போக்குவரத்து திருப்பி விடப்பட்டுள்ளது.

மக்கள் நீண்ட வரிசையில் காத்திருந்து அஞ்சலி செலுத்தி வருகிறார்கள்

அப்பகுதியில் போக்குவரத்து ஸதம்பித்து விட்டது,

முன்னாள் எம் பி. செனாதிபதி. மதுரை எம ஆர் கணேசன், திட்டக்குழு துணைத் தலைவர் பாவலர் முத்துசாமி அண்ணா நம்பி எம்பி ராதாகிருஷ்ணன் எம்.எல்.சி. ராஜ நாராயணன், கு. ச. செல்வம் தி நகர் மூர்த்தி ஆர் டி சீதாபதி, முன்னாள் எம்.பி. விஸ்வநாதன் டாக்டர் பெரியசாமி. ராமசாமி உடையார். லட்சுமிநாராயணன்,

(2-ம பக்கம் பார்க்க)

### விடுமுறை அறிவிப்பு

அண்ணா நாளிதழின் முன்னாள் ஆசிரியர் பெரியவர் எம் ஜி சி காலமானதற்கு ஆழ்ந்த இரங்கலைத் தெரிவிக்கும்வகையில் அண்ணா நாளிதழ் அலுவலகத்திற்கு நாளை (19-ந் தேதி) விடுமுறையாகும்.

எனவே அடுத்த இதழ் சென்னையில் 20ந் தேதி மாலையும். வெளியூர்களில் 21ந் தேதி காலையும் கிடைக்கும்



இதய வீணை படத்தில பெரியவர் எம் ஜி சி

### தலைமைக் கழக அறிவிப்பு

நமது இதயதெய்வம் மாண்புமிகு முதல்வர் டாக்டர் புரட்சித்தலைவர் அவர்களின் சகோதரரும், கழகத்தின் மூத்த உறுப்பினருமான பெரியவர் எம், ஜி சக்கரபாணி அவர்களின் மறைவினையொட்டி கழகத்தின் சார்பில் இன்று முதல் மூன்று நாட்கள் துக்கம் கடைப்பிடிக்கப்படும்.

எனவே கழகத் தோழர்கள் கழகக் கொடிகளை 3 நாட்களுக்கு அரைக் கம்பத்தில் பறக்க விடும்படி கேட்டுக் கொள்கிறேன்.

எஸ். இராகவானந்தம்
பொதுச்செயலாளர்
அனைத்திந்திய அண்ணா தி மு கழகம்

சென்னை-14
18-8-86

## ஆர். எம். வீக்கு விஸ்வகர்மா பேரவை ஆதரவு

தமிழ்நாடு விஸ்வகர்மா ஐக்கிய பேரவைக்கூட்டம் அங்கமுத்து எம். எல். சு. தலைமையில் நடைபெற்றது. இக்கூட்டத்தில் பொருளாளர் சேது. துரை, சோமசுந்தரம் கேசவன் வேலுசாமி தங்கப்பா சுடலைமுத்து ஆச்சாரி, மற்றும் பலர் கலந்து கொண்டனர். கூட்டத்தின் முடிவில் நெல்லையில் போட்டியிடும் அமைச்சர் ஆர்.எம்.வீ.க்கு முழு ஆதரவு தருவது என்று முடிவு செய்யப்பட்டது.

அதே போல தமிழ்நாடு திருக்கோவில் பண்டாரம் மத்திய சங்கத்தின் கூட்டம் மாவட்டத் தலைவர் அருணாசலம் தலைமையில் நடைபெற்றது. கூட்ட முடிவில் நெல்லையில் போட்டியிடும் கழக வேட்பாளர் அமைச்சர் ஆர் எம் வீக்கு முழு ஆதரவு அளிப்பது என்று முடிவு எடுக்கப்பட்டது.

## மதுரையில் சுதந்திர தின விழா

மதுரை ஆக 17. மதுரை ஆயுதப்படை மைதானத்தில் நடைபெற்ற சுதந்திர திருநாள் விழாவில் கலந்துகொண்டு மாவட்ட ஆட்சி தலைவர் இரா. வரதராஜுலு தேசிய கொடியை ஏற்றி வைத்தார்.

முதியோருக்கு உதவி தொகைகளையும், இலவச வேட்டி சேலையையும் தொழில் தொடங்குகிற இளைஞர்களுக்கு கடன் உதவிகளையும் மாவட்ட ஆட்சித் தலைவர் வழங்கினார்.

மீனாட்சி அம்மன்கோவிலில் பகல் 12½ மணிக்கு சமபந்தி விருந்து நடைபெற்றது.

இதில் காவல்துறை டி. ஐ. ஜி. கோவிந்த் அறங்காவலர் ராமலிங்கம் நிர்வாக அதிகாரி அரங்கசாமி தக்கார் வி. என். சிதம்பரம் மற்றும் திரளானவர்கள் கலந்து கொண்டனர்.

திருப்பரங்குன்றம் கோவிலில் நடைபெற்ற சமபந்தி விருந்தில் சுற்றுலா வாரிய தலைவர் வெ. பாலகுரு தக்கார் ஜெயபாண்டியன், பாண்டியன் ஓட்டல் அதிபர் சுந்தரபாண்டியன் மற்றும் பலர் கலந்து கொண்டனர். இதில் 3000 பேர் கலந்து கொண்டு உணவு அருந்தினார்கள்.





பெரியவர் எம். ஜி. சி, அவரது துணைவியார், முதல்வர் புரட்சித் தலைவர் அவரது துணைவியார் ஜானகி அம்மையார். (பழைய படம்)

# பெரியவர் அமரரானார்...

(1-ம் பக்கம் தொடர்ச்சி)

ஆகியோரும் பெரியவர் உடலுக்கு மாலை அணிவித்து அஞ்சலி செலுத்தினர்.

### காங்கிரஸ் தலைவர்கள்

காங்கிரஸ் பொதுச் செயலாளர் ஜி. கே. மூப்பனார் எம். பி. 10.15 க்கு வந்து மலர்வளையம் வைத்து அஞ்சலி செலுத்தினார், சட்டமன்ற எதிர்க்கட்சித் தலைவர் உ. சுப்பிரமணியம் எம். எல். ஏ- காங்கிரஸ் தலைவர் எம். பழனியாண்டி துணைத் தலைவர் ஏ. ஆர். மாரிமுத்து செயலாளர் பாலகிருஷ்ணன், புதுவை மாநில அமைச்சர் கண்ணன் திமுகழக துணைப்பொதுச் செயலாளர் நாஞ்சில் மனோகரன் ஆகியோர் மலர்வளையம் வைத்து அஞ்சலி செலுத்தினர்,

கழக கொள்கைபரப்புச் செயலாளர் செல்வி ஜெயலலிதா எம். பி, காலை 9-45 மணிக்கு வந்து பெரியவர் உடல் மீது மலர் வளையம் வைத்து அஞ்சலி செலுத்தினார். தொழிற்சங்க பேரவை பொதுச்செயலாளர் வை பெருமாள். தூயமணி விவசாயப்பிரிவு செயலாளர் லட்சுமிநாராயணன். ஆர். டி. சீதாபதி மற்றும் ஆசிரியர் வீட்டு வசதிச கழகத் தலைவர் மாசிலாமணி.

முன்னாள் மத்திய அமைச்சர் சி. சுப்பிரமணியம் முத்தமிழ் காவலர் கி. ஆ. பெ. விசுவநாதம். வி. எம். பரமசிவம் முதலியார் இரா. ஜனார்த்தனம், கழக துணைப் பொதுச் செயலாளர் எஸ் ஆர் இராதா, கோ. செங்குட்டுவன் ஆவின் தலைவர் கலைமணி டிட்கோ தலைவர் சுலோசனாசம்பத் இனியன் சம்பத் பம்மல் நல்லதம்பி. வடாற்காடு மாவட்ட இளைஞர் அணி செயலாளர் யுவராஜ் கவிஞர் புத்தனேரி சுப்பிரமணியம் ஓயப்பொடி பிரசாத் ஆயிரம் விளக்கு ராமமூர்த்தி. பண்ணடி கிருஷ்ணமூர்த்தி கழக எம். ஜி. ஆர். இளைஞர் அணிச்செயலாளர் ஜே. சி. டி பிரபாகரன், துறைமுகம் பகுதி தலைவர் க காஜா ராயப்பேட்டை பிச்சைக்கண்ணு, தொழில் அதிபர் எம் ஏ எம் ராமசாமி,

திரைப்பட நடிகர்கள் எஸ். வி சகஸ்ரநாமம் பாக்யராஜ் ராஜேஷ், கண்ணன். ஸ்டண்ட் முத்து மாடக்குளம் தர்மலிங்கம் கே. ஆர். விஜயா. வேலாயுதம் நாயர், மாடி லட்சுமி சட்டமன்ற உறுப்பினர்கள கலிதீர்த்தான் எடப்பாடி கோவிந்தசாமி சாமி தாக்கூர் சுப்பிரமணியம் இராமநாதன் எம் பி. இரா. சாம்பசிவம் டி. கே. கபாலி சம்மந்தப்பா (காங்கிரஸ்) சேலம் கண்ணன் எம் பி அயன்புரம் ஜானி இளைஞர் அணி முத்துராசன் பசுப்பொன் பாலு புதுக்கோட்டை மாவட்ட செயலாளர் ரகுபதி ராசேந்திரன காஞ்சி பன்னீர்செல்வம துறைமுகம் எம் பி. ஹபீப் சென்னை நகர இளைஞர் மீலாத் கமிட்டி தலைவர் கே. ஏ. சாகுல்அமீது ஆகியோரும் பெரியவருக்கு அஞ்சலி செலுத்தினர்.

பெரியவரின் மக்கப்பேன் ராமதாஸ் பெரியவருக்கு மலர் வளையம் வைத்து அஞ்சலி செலுத்தினார்,

பெரியவரின் புதல்வரும் திரைப்பட நடிகருமான எம். ஜி. சி சுகுமாரும் கழக எம். பி. ஏ. சி சண்முகமும் நெல்லை தோதலுக்கு ரயிலில் நேற்று இரவு சென்றனர்.

விருத்தாசலம் செல்லும்போது பெரியவர் மறைவுச் செய்தி அவர்களுக்கு தெரிவிக்கப்பட்டது உடனே அங்கிருந்து சென்னை திரும்பி வந்தனர்.

அண்ணா நாளிதழ் ஊழியர்களும் அஞ்சலி செலுத்தினார்கள்.

எம். ஜி. ஆர். மேல்நிலைப்பள்ளி ஆசிரியர்கள் கறுப்புச் சின்னம் அணிந்து ஊர்வலமாக வந்தனர். மலர்வளையம் வைத்து அஞ்சலி செலுத்தினர்.

### மக்கள் கூட்டம்

கடும் வெயிலையும் பொருட்படுத்தாமல் ஏராளமான மக்கள் வரிசையில் நீண்ட நேரம் காத்திருந்து பெரியவர் எம். ஜி. சிக்கு தங்கள் இறுதி மரியாதையைச் செலுத்தினர்.

வெயிலில் நிற்பவர்களுக்கு குடிநீர் வழங்க ஏற்பாடு செய்யப்பட்டது.

## ரஷ்ய ராக்கெட் கடலில் விழுந்தது

கொலராடோஸ்பிரிங்ஸ், ஆக. 18— ரஷ்யாவின் பெரிய செயற்கை கோள் ஒன்று ஞாயிறு காலை இந்துமாகடலின் தென் பகுதியில் விழுந்தது. இந்த தகவலை அமெரிக்க ராணுவ அதிகாரி ஒருவர் தெரிவித்தார்.

இது சாற்று மண்டலத்தின் வழியே கீழிறங்கி தீப்பிடித்து கடலில் விழுந்ததாக தெரிவிக்கப்பட்டது.

இந்துமாக கடலில் விழுந்த ரஷ்ய ராக்கெட் காஸ்மாஸ் 1767 ஆகும்.

## கழக தேர்தல் அலுவலகம்: மத்திய அமைச்சர் திறந்து வைத்தார்

நெல்லை. ஆக. 18— நெல்லை டவுன் வாகையடிமுனை என்ற இடத்தில் கழக தேர்தல் அலுவலகத்தை மத்திய அமைச்சர் அருணாசலம் திறந்து வைத்து பேசினார் ராஜகிரி. ஆறுமுகம். பீட்டர் அல்போன்ஸ், அழகப்பா ஆறுமுகம் எம். எல். ஏ. மற்றும் பலர் கலந்து கொண்டனர்.

## வைத்யா கொலை: துப்பு துலங்கியது 4 பேருக்கு வலைவீச்சு

### மத்திய புலனாய்வுத்துறை தீவிரம்

பூனே ஆக. 18— முன்னாள் ராணுவத் தளபதி ஜெனரல் வைத்யாவை கொலை செய்த ஆசாமிகளின் விவரம் முழுவதும் கிடைத்து விட்டன. பயங்கரவாதி ஜிண்டா உள்பட 4 பேர்களையும் போலீசார் தீவிரமாக வலை வீசி தேடிவருகிறார்கள்

முன்னாள் ராணுவ தளபதி ஜெனரல் ஏ. எஸ். வைத்யா கடந்த 10 ம் தேதி பூனாவில் சீக்கிய பயங்கரவாதிகளால் துப்பாக்கியால் சுட்டுக் கொலை செய்யப்பட்டார். காரில் தனது மனைவியுடன் சென்று கொண்டிருந்த போது இந்த பயங்கர சம்பவம் நடந்தது 4 பேர் ஸ்கூட்டர்களில் வந்து அவரைச் சுட்டார்கள்

கொலையாளிகளை கண்டுபிடிப்பதில் போலீசார் தீவிரமாக ஈடுபட்டனர். இந்த கொலை வழக்கில் தப்பு துலங்கியுள்ளது

மத்திய புலனாய்வுத் துறையினர் (சி.பி.ஐ) கொலையாளிகளின் முழு விவரங்களையும் கண்டுபிடித்து விட்டனர்.

இந்த 4 ஆசாமிகளின் புகைப்படங்கள் மற்றும் பல வேறு விவரங்களும் வெளியிடப்பட்டுள்ளன.

கொலையாளிகளில் முக்கிய பயங்கரவாதி என கருதப்படும் ஜிண்டா என்கிற ஹர்ஜீந்தர் சிங் பற்றிய விவரம் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. இவனுக்கு விஜய சாதா என்ற மற்றொரு பெயரும் உண்டு

சில மாதங்களுக்கு முன் குஜராத் சிறையிலிருந்து ஜிண்டா தப்பி ஓடிவிட்டான் மற்றொருவன் பெயர் சுகிந்தர்சிங் இவனுக்கு சுகி, விகாஸ் கோஹ்லி, ராஜ்பீந்தர்சிங் என்ற வேறு பெயர்களும் உண்டு.

மற்றொருவனின் பெயர் சுரீந்தர் சிங் என்கிற போலா மற்றொருவனின் விவரங்களும் கிடைத்துள்ளன அவனுடைய சரியான பெயர் ஊர்ஜிதம் செய்யப்படவில்லை

இந்த 4 பேர்களும் எதற்கும் அஞ்சாத சீக்கிய பயங்கரவாதிகள் பம்பாய் பூனே தானே ஆகிய இடங்களில் கொலை, கொள்ளை திருட்டு முதலிய வழக்குகளில் சம்பந்தப்பட்டவர்கள்:

கடந்த ஜூன் மாதம் 13ம் தேதி பாங்க் ஆப் இந்தியாவின் கிளை ஒன்றில் 25 லட்சம் ருபாயை இந்த 4 பேரும் கொள்ளை அடித்தனர் 3 பேர்களை சுட்டு கொன்று விட்டு வங்கிப் பணத்தை கொள்ளை அடித்த பயங்கரவாதிகள் இவர்கள் தான் என்ற விவரங்களையும் போலீசார் தெரிவித்தனர்.

இந்த 4 ஆசாமிகளின் புகைப்படங்கள் விவரங்கள் ஆகியவை அனைத்துப் போலீஸ் நிலையங்கள் பொது இடங்கள் பேருந்து ரெயில்வே விமான நிலையங்கள் முதலிய இடங்களில் ஒட்டப்படும் பத்திரிகைகளிலும் பிரசுரிக்கப்பட்டுள்ளது.

இவர்களின் நடமாட்டத்தை தெரிந்து கொள்வோர் அவர்கள் பற்றிய விவரங்களை தெரிவிக்குமாறு பொதுமக்கள் கேட்டுக் கொள்ளப்பட்டுள்ளனர்.

## பாகிஸ்தானில் ரகளை கொள்ளை - தீ வைப்பு 1000 பேர் கைது

கராச்சி. ஆக. 18- பாகிஸ்தான் மக்கள் கட்சித்தலைவர் பெனாசிர் பூட்டோவும் எதிர்க் கட்சித் தலைவர்களும கைது செய்யப்பட்டதை தொடர்ந்து பாகிஸ்தானில் கலவரம் மூண்டது, அரசு அலுவலகங்கள். வீடுகள். கடைகள் தீவைத்துக் கொளுத்தப்பட்டன இதுவரை ஆயிரத்துக்கும் மேற்பட்டவர்கள் கைது செய்யப்பட்டுள்ளனர்.

பாகிஸ்தான் அதிபர் ஜியாவுல் அக்கை எதிர்த்து பாகிஸ்தான் மக்கள் கட்சியினர் ஆர்ப்பாட்டம் செய்து வருகிறார்கள். ஜியாவுல்அக் பதவி விலக வேண்டும் என்றும் அவர்கள் கோரிவருகிறார்கள்.

பூட்டோவின் மகள் பெனாசிருக்கு ஆதரவு பெருகி வருகிறது பாகிஸ்தான் அரசு கடந்த வியாழக்கிழமை பெனாசிர் பூட்டோவையும் அவரது ஆதரவாளர்களையும் கைது செய்தது.

இதனால் பாகிஸ்தானில் கலவரம் மூண்டது. ஆயிரக்கணக்கான இளைஞர்கள் இதை எதிர்ப்பு இயக்கத்தில் ஈடுபட்டனர்.

அரசு அலுவலகங்கள் கடைகள் விடுகள் தீவைத்துக்கொளுத்தப்பட்டன.

கராச்சியில் ஏராளமான விடுகளுக்கு ஆர்ப்பாட்டக்காரர்கள் தீவைத்தனர்.

கடந்த 5 நாட்களாக காச்சி. சிந்து, மற்றும் பாகிஸ்தானின் பல வேறு பகுதிகளிலும் வன்முறை சம்பவங்கள் நடந்த வண்ணம் உள்ளன. சாலைகளிலும் தெருக்களிலும் இரு கோஷ்டிகள் பயங்கரமாக மோதுக் கொண்டன, கத்தி, கடப்பாரை, மற்றும் பயங்கர ஆயுதங்களால் தாக்கிக் கொள்ளுகிறார்கள் தெருச்சண்டைகள் ஓயவில்லை.

கலவரக்காரர்களை அடக்க போலீசார் துப்பாக்கி சூடு நடத்தினர் இதில் இதுவரை 60 பேர் உயிரிழந்தனர் பெனாசிர் பூட்டோவையும் அவரது ஆதரவாளர்களையும் விடுதலை செய்யுமாறு ஆர்ப்பாட்டக்காரர்கள் கோரி வருகிறார்கள்.

இதுவரை சுமார் ஆயிரத்துக்கும் மேற்பட்டவர்களை பாகிஸ்தான் அரசு கைது செய்துள்ளது.

## ரூ. 50 ஆயிரம் ஏப்பமா?

மதுராந்தகம் ஆறுமுகம் மாவட்டக் கழக நிர்வாகிகளுடன் வந்து ஐம்பதாயிரத்தை அளித்தார்.

முரசொலியில் கருணாநிதி கடிதம்

கருணாநிதியிடம், மதுராந்தகம் ஆறுமுகம் ஒரு லட்சம் ரூபாய் நிதி வழங்கினார்

தினகரன் செய்தி

அம்மவோ! ஐம்பதாயிரம் ரூபாய் போனதெங்கே?

## அமைச்சர் ஆர்.எம்.வீ. ஓட்டு சேகரிப்பு

நெல்லை ஆக. 18- நெல்லையில் அமைச்சர் ஆர். எம் வீ. கிராமம். கிராமமாக சென்று ஓட்டு கேட்டார்.

அமைச்சர் ஆர். எம். வீ. 29, 31 32 ஆகிய வார்டுகளுக்கு சென்று ஓட்டு கேட்டார்.

மீனாட்சிபுரம். அண்ணா நகர், கீழத்தெரு, மேலத்தெரு அருந்ததியர் காலனி, என். ஜி. ஓ. காலனி அன்பா கிராமம், வரதராஜபுரம், ரயில்வே காலனி டாபி காலனி, ஆகிய பகுதிகளில் வீடு வீடாகச்சென்று அமைச்சர் ஆர். எம். வீ ஓட்டு கேட்டார்.

வரதராஜபுரத்தில் கணபதி சுப்பிரமணியம் என்பவர் அமைச்சர் ஆர் எம் வீயிடம் தேர்தல் நிதியாக 500 ரூபாய் கொடுத்தார்.

அமைச்சர் சென்ற கிராமங்களில் உள்ள வீடுகளின் முன்பு இரட்டை இலை கோலம் போடப்பட்டிருந்தது பெண்கள் அமைச்சருக்கு ஆரத்தி எடுத்து நெற்றித் திலகம் வைத்தனர்.

அமைச்சருடன் முருகன், இளமதி, பகவதி சோமசுந்தரம், கஸ்தூரி பெருமாள், வேணுகோபால் சுப்பிரமணிய ஆதித்தன், சிதம்பரம், ராஜன். ரசூலா பகுத் தேசியப்பன், ஆலடி அருணா எப். பி பாபு கணபதி கமலா செந்தில் குமார், நெகமம் கந்தசாமி எம். எல். ஏ, வர்கிஸ், மற்றும் ஏராளமான கழகத் தொண்டர்கள் உடன் சென்றனர்

### விவசாய சங்கம்

திருநெல்வேலி. ஆக. 18- நெல்லை மாவட்ட கட்சி சார்பற்ற விவசாய சங்க தலைவர் மா. குருசாமி தேவர் ஒரு அறிக்கையில் கூறியிருப்பதாவது:—

விவசாயிகளுக்கு நன்மை செய்து வரும் புரட்சித் தலைவர் அரசில் இடம் பெற்றுள்ள அமைச்சர் வீரப்பனுக்கு இரட்டை இலை சின்னத்தில் வாக்களித்து வெற்றி பெற செய்யுமாறு அனைவரையும் கேட்டுக்கொள்கிறேன்

இவ்வாறு குருசாமி தேவர் கூறியிருக்கிறார்.

## மருத்துவக் கல்வி இயக்ககம் அறிவிப்பு

ந.க. 31152-ME II-2-86

தமிழ்நாடு மாநிலத்தில் 1986—87ம் ஆண்டிற்கு அரசு மருத்துவக் கல்லூரிகளில் எம். பி. பி. எஸ். கோர்ஸில் ஸ்ரீலங்கா அகதிகள் சேர்க்கை

1. தமிழ்நாட்டில் உள்ள அரசு மருத்துவக் கல்லூரிகளில் 1986—87 எம்.பி.பி.எஸ் டிகிரி கோர்ஸில் சேர்வதற்கான விண்ணப்பங்கள் ஸ்ரீலங்கா அகதிகளிடமிருந்துவரவேற்கப் படுகின்றன. ஸ்ரீலங்காவிலிருந்து தாய் நாட்டுக்கு திருப்பி அனுப்பப்பட்டவர்கள் (Sri Lankan Repatriates) விண்ணப்பிக்க அருகதை கிடையாது.

தமிழ்நாட்டில் மருத்துவ கோர்சுகளில் சேர்வதற்கான நுழைவுத் தேர்வுகளுக்கு விண்ணப்பித்துள்ள, மற்றும் தமிழ்நாடு வேளாண்மை பல்கலைக்கழகம் மற்றும் மருத்துவக்கல்வி இயக்ககத்தால் வெளியிடப்பட்ட முந்தைய அறிவிப்புகளின்படி விண்ணப்பித்துள்ள ஸ்ரீலங்கா அகதி அபேட்சகர்கள் மீண்டும் புதிதாக விண்ணப்பிக்கவேண்டும், அவர்களதுமுந்திய விண்ணப்பம் பரிசீலிக்கப்படமாட்டாது. ஏனெனில் முந்திய அறிவிப்புகள் தமிழ்நாட்டைச் சேர்ந்த அபேட்சகர்களுக்கு மட்டுமேயாகும்

2. அருகதை தேர்விலும் மற்றும் தேர்வுகளுக்கான கட்டுப்பாட்டு அலுவலர், மருத்துவக் கல்வி இயக்குநர் அலுவலகம், சென்னை-600 005 அவர்களால நடத்தப்படவிருக்கும் நுழைவுத் தேர்விலும் சம்பந்தப்பட்ட அபேட்சகரின் செயல்பாட்டின் அடிப்படையில் கோர்சில் சேர்த்துக் கொள்வதற்குரிய அபேட்சகர்கள் தேர்ந்தெடுக்கப்படுவார்கள்.

நுழைவுத் தேர்வுக்கான தேதி: 07-9-1986

நுழைவுத் தேர்வு நடைபெறும்இடம் சென்னை மட்டுமே.

3 எம். பி. பி. எஸ். கோர்சுக்கான விண்ணப்பம் 18. 8. 86 முதல் வழங்கப்படும். விண்ணப்பப் படிவம் மற்றும் தகவல் தொகுப்புரையை மருத்துக் கல்வி இயக்குநர், சென்னை அவர்களிடமிருந்து நேரில் அல்லது அஞ்சல் மூலம் வேண்டு கோளின் பேரில் மருத்துவக் கல்வி இயக்குநர் சென்னை—600005 சார்பில் பெறப்பட்ட ரூபாய் 15/- (ரூபாய் பதினைந்து மட்டும்) க்கான குறுக்கு கோடிட்ட இந்திய அஞ்சல் ஆணையை (இது 15. 8. 86 க்கு முந்தைய தேதியுள்ளதாக இருக்கக் கூடாது) யும் சுய முகவரியிட்ட 30 செ. மீ × 12.5 செ. மீ. அளவுள்ள ரூபாய் 2/50 க்கு தபால் தலை ஒட்டப்பட்ட உறையையும் இணைத்து அனுப்பிப் பெற்றுக் கொள்ளலாம்.

4. தகுதி-எம்.பி பி.எஸ் கோர்ஸ்

1. கீழ்க்கண்ட தொகுதி பாடங்களுடன் தமிழ்நாடு மேல்நிலைககல்வி மாநில வாரியத்தால் நடத்தப்பட்ட மேல்நிலைக் கல்வி சான்று (அகா. மிக்) தேர்வில் (Higher Secondary Certificate (Academic) Examination) வெற்றி பெற்ற அபேட்சகர்கள் முதல் வருட எம்.பி.பி.எஸ். கோர்சில் சேர தகுதி உடையவராவர்

1. கணிதம், இயற்பியல், வேதியியல் மற்றும் உயிரியல்

அல்லது

2. இயற்பியல், வேதியியல், தாவரயியல் மற்றும் விலங்கியல்

அல்லது

3. இயற்பியல், வேதியியல், உயிரியல் மற்றும் இதர வேறு பாடங்களுடன்

இதற்கு சமமான இதர தேர்வுகளில் வெற்றி பெற்ற அபேட்சகர்களும் இந்த கோர்சில் சேர தகுதி பெற்றவர் ஆவார்கள் தமிழ் நாட்டில உள்ள பல்கலைக் கழகங்களுள் ஒன்றிலிருந்து தேவையான தகுதி சான்றிதழ்களைப் பெறுவது அபேட்சகர்களின் பொறுப்பாகும்

ஹையர் செகண்டரி சர்டிபிகேட் (தொழில் கல்வி ஸ்ட்ரீம அபேட்சகர்கள் மற்றும் பி,யு.சி அபேட்சகர்கள எம் பி பி எஸ் கோர்சில் சேர தகுதி இல்லாதவர்கள்.

II) இயற்பியல், வேதியியல் மற்றும் உயிரியல் ஆகிய பாடங்களுடன், மேற்கண்ட பாடங்களில் ஒரு செய்முறை தேர்வுடன் ஒரு அங்கீகரிக்கப்பட்ட பல்கலைக் கழகத்தின் மூன்று ஆண்டு பட்டப் படிப்பின் முதல் ஆண்டு தேர்வு பெற்ற அபேட்சகர்களும் தகுதி உள்ளவர்களாவார்கள். எனினும் அத்தேர்வு பல்கலைக் கழகத் தேர்வாக இருத்தல் வேண்டும்.

குறைந்தபட்ச மதிப்பெண்கள்:

1. எச். எஸ். சி. (H.S.C) (அகாடமிக்) அல்லது முதல் வருட பட்டப்படிப்பு அல்லது இதர சமமான தேர்வில் வெற்றி பெற்ற அபேட்சகர்கள் கீழ்க்கண்ட மதிப்பெண்களைப் பெற்று இருந்தால் எம்.பி.பி.எஸ். கோர்ஸில் முதல் வருடத்தில் சேர தகுதி உடையவராவர்.

(அ) விலங்கியல் மற்றும் தாவர இயலில் குறைந்தபட்சம் 60 சதவிகித மதிப்பெண்கள் அல்லது உயிரியலில் குறைந்தபட்சம் 60 சதவித மதிப்பெண்கள்.

(ஆ) இயற்பியல் மற்றும வேதியியல் ஆகியபாடங்கள் ஒவ்வொன்றிலும் குறைந்தபட்சம் 60 சதவிகித மதிப்பெண்கள்.

[இ] (அ) மற்றும் (ஆ)வின் மொத்த மதிப்பெண்கள் மேலே (அ) மற்றும் (ஆ)வில் குறிப்பிடப்பட்டுள்ள அறிவியல் பாடங்களில் 200க்கு 40 மதிப்பெண்களுக்கு குறையாமல் பெற்றிருக்கவேண்டும்

வயது 31-12-1986 அன்று அல்லது அதற்கு முன்பாக அபேட்சகர்கள் 17 ஆண்டை நிறைவு செய்திருக்க வேண்டும்.

நிர்ணயிக்கப்பட்டுள்ள வயது வரம்பிலிருந்து விலக்களிக்க எந்த வேண்டுகோளும் ஏற்கப்பட மாட்டாது.

குறிப்பு: 1) சென்னை, மறுவாழ்வு இயக்குநரால் வழங்கப்பட்ட அகதிச் சான்றிதழ் நகல் ஒன்றை அபேட்சகர் அனுப்ப வேண்டும்.

2. 30 செ. மீ × 12.5 செ. மீ. அளவுள்ளதும் 70 பைசா தபால் தலை ஒட்டப்பட்டதுமான சுய முகவரியிட்ட இரண்டு உறைகளை அனுப்பவேண்டும்.

3. அருகதைத்தேர்வில் அவர்கள் பெற்ற சரியான மதிப்பெண்களை அனுப்புமபடி அபேட்சகர்களுக்கு யோசனை கூறப்படுகிறது விண்ணப்பத்துடன் சரியான மதிப்பெண்கள் அனுப்பப்படாமல "கிரேடுகள்" அனுப்பப்பட்டால் அந்த கிரேடில் குறைந்தபட்ச மதிப்பு எண்களே எடுத்துக் கொள்ளப்படும்.

தேவையான எல்லா இணைப்புகளுடன் நிறைவு செய்யப்பட்ட விண்ணப்பம் கீழ்க்கண்ட முகவரிக்கு பதிவுத்தபால் மூலம் அல்லது நேரில் சமர்ப்பிக்கப்பட வேண்டும்.

செயலாளர்,
ஒருங்கிணைப்புக் குழு அலுவலகம்,
கீழ்ப்பாக்கம் மருத்துவக் கல்லூரி,
மருத்துவமனை வளாகம்
சென்னை-600 010,

விண்ணப்பப்படிவம் கிடைக்க இறுதிதேதி 1-9-86 1—9—86 அன்று மாலை 5மணிக்குப்பின் கிடைக்கும் விண்ணப்பம் எக்காரணம் கொண்டும் ஏற்கப்பட மாட்டாது

முக்கிய மான தேதிகள்

| | | |
|---|---|---|
| 1. | விண்ணப்பம் வழங்கப்படும் தேதி | 18-8-86 |
| 2 | விண்ணப்பம் கிடைக்க இறுதி தேதி- | 1-9-86 |
| 3 | நுழைவுத் தேர்வு தேதி | 7-9-86 |

மருத்துவக் கல்வி இயக்குநர்

எழிலகம் இணைப்பு
சேப்பாக்கம்,
சென்னை—600 005,
7—8—86.



# தமிழ்நாட்டிற்கு கல்லாறு தண்ணீர்
# கேரள முதல்வர் கருணாகரனுக்கு
# புரட்சித்தலைவர்
# கடிதம்

மதுரை, ஆக. 18. கேரள மாநிலத்தில் கல்லாற்றில் உபரியாக உள்ள தண்ணீரை தமிழ் நாட்டிற்கு அளிக்க வற்புறுத்தி கேரள முதல்வர் கருணாகரனுக்கு, முதல்வர் புரட்சித்தலைவர் கடிதம் எழுதியுள்ளார்.

மதுரையில் நிருபர்களிடம் பேசுகையில் அமைச்சர் காளிமுத்து மேற்கண்ட தகவலை தெரிவித்தார்

மேலும் அவர் கூறியதாவது:

கல்லாற்று நீரை இடுக்கி அணைக்குத் திருப்பிவிடுவதற்காக கேரள மின்துறை அணை ஒன்றை கட்டி வருகிறது.

இதில் ஒரு பகுதி நீரை தமிழகத்திற்குத் திருப்பிவிடலாம் அதைச் சுரங்கப்பாதை அமைத்து அதன் மூலம் தமிழகத்திற்கு கொண்டுவரலாம்

இதன் மூலம் மதுரையின் குடிநீர் பிரச்சினைக்கு நிரந்தரத் தீர்வு காணலாம்.

### முதல்வர் கடிதம்



கல்லாற்று நீரை தமிழகத்திற்குத் திருப்பிவிடுவது பற்றி மந்திரிகள் அளவில் பேச்சு வார்த்தை நடத்த வேண்டும் என வற்புறுத்தி, முதல்வர் புரட்சித்தலைவர் கேரள முதல்வர் கருணாகரனுக்கு கடிதம் எழுதியுள்ளார்.

இவ்வாறு அமைச்சர் காளிமுத்து கூறினார்.

## அமைச்சர் ப. உ. ச. பிறந்த நாள்

திருவண்ணாமலை, ஆக. 18— அமைச்சர் ப. உ. ச. தனது 63வது பிறந்தநாள் விழாவை திருவண்ணாமலையில் தனது இல்லத்தில் எளிமையாக கொண்டாடினார்.

அவர் தந்தையின் சமாதிக்குச் சென்று வணங்கிவிட்டு பொதுமக்கள் நகரப் பிரமுகர்கள் மற்றும் கழகத் தோழர்கள் வாழ்த்துக்களை பெற்றுக் கொண்டார்

சேலம் மாவட்ட செயலாளர் கே. பி. செல்வராசு புத்தூர் ராஜேந்திரன், பசுபொன் பாலு மற்றும் தோழர்கள் அவரது இல்லத்தில் சந்தித்து வாழ்த்துக் கூறினர்.

பின்னர் அமைச்சர் சுதந்திர தின விழாவில் கலந்து கொண்டார். அருள்மிகு அருணாசலேசுவரர் ஆலயத்தில நடைபெற்ற பொது விருந்திலும்கலந்து கொண்டார். இரவு செஞ்சியில் நடைபெற்ற கழகக் கூட்டத்தில பங்கேற்று உரையாற்றினார்

## பாளை யூனியனில் திமுக கூடாரம் காலி

நெல்லை, ஆக 18— பாளையங்கோட்டை யூனியனைச் சேர்ந்த கிழநத்தம் கிராமத்தில் துணைப்பாண்டியன், இளைஞர் அணி திமுக தலைவர் கருப்பசாமி, தி.மு.க இளைஞர் அணி பொருளாளர் ராமலிங்கம், கிழநத்தம் பஞ்சாயத்து துணை தலைவர் சிவசுப்பிரமணியன், திமுக இளைஞர் அணி தலைவர் (தெற்கு) லட்சுமணன் செயலாளர் எம் ஆறுமுகம் பொருளாளர் பூல்பாண்டியன் மணி, மாயாண்டி பாண்டியன், முருகன் முத்து, வடிவேல், அடைக்கலம், பரமசிவன், வி. பரமசிவம், கண்ணையா உள்பட மொத்தம் 17 பேர் கருணாநிதி போக்கு பிடிக்காத காரணத்தினால் தி.மு.கவை விட்டு கூண்டோடு விலகி அமைச்சர் ஆர்,எம். வீ கிழநத்தம் கிராமத்திற்கு சென்ற போது கழகத்தில் இணைந்தனர் அமைச்சர் கைத்தறி ஆடை அணிவித்து அவர்களை வரவேற்றார்.

## நெல்லை தேர்தலில் தியாகிகள்

திருநெல்வேலி, ஆக. 18- தமிழ்நாடு சுதந்திர போராட்ட வீரர்கள் காங்கிரஸ் கூட்டம் மதுரையில் நடந்தது. முன்னாள் எம் எல்ஏ. எம் எஸ். செல்வராஜன் தலைமையில் நடந்த இக்கூட்டத்தில் நெல்லை அருப்புக் கோட்டை தொகுதி தேர்தலில் கழகத்திற்கு ஆதரவு அளிப்பது என்று முடிவு எடுக்கப்பட்டது

## அமைச்சர் வி. வி. எஸ். பிரச்சாரம்

நெல்லை ஆக 18— தமிழக அமைச்சர் வி.வி சுவாமிநாதன் தமிழக அரசின் டெல்லி சிறப்பு பிரதிநிதி நட்டுராசன் ஆகியோர் நெல்லை தொகுதியில் அமைச்சர் ஆர், எம் வீ.க்கு இரட்டை இலை சின்னத்தில்வாக்குக் கேட்டனர்.

பழையபேட்டை தொழிலியல் நெசவாளர் சங்கத்துக்கு கழக தொண்டர்களுடன் அமைச்சர் வி. வி. சுவாமிநாதன் சென்றார். அங்கு கூடியிருந்த தாய்மார்களும் பெரியவர்களும் அமைச்சர் வி வி, சுவாமிநாதனைவரவேற்று அமோக ஆதரவை தெரிவித்தனர்.

செங்குந்தர் நடுத்தெரு கீழத் தெரு உட்பட பல பகுதிகளுக்கு ஓட்டு கேட்கச் சென்ற போது மாலைகள் அணிவித்தும் ஆரத்தி எடுத்தும் வரவேற்று ஆதரவை தெரிவித்தனர்

## கழகத்திற்கு ஆதரவு: ஆண்டித்தேவர்-ஏ ஆர் பெருமாள் அறிக்கை

மதுரை, ஆக. 18— நெல்லை - அருப்புக் கோட்டை தொகுதியில் போட்டியிடும் கழகவேட்பாளர்கள அமைச்சர் ஆர்.எம்வீ.-பஞ்சவர்ணம் ஆகியோரை வெற்றி பெறச் செய்ய பார்வர்ட் பிளாக் தொண்டர்கள் அயராது உழைக்கவேண்டும் என்று அகில இந்திய பார்வர்ட் பிளாக் தமிழக கமிட்டியின் தலைவர் ஏ ஆர் பெருமாள் மாநிலப் பொதுச் செயலாளர் ஆண்டித் தேவரும் ஓர் அறிக்கை மூலம் வேண்டுகோள் விடுத்துள்ளனர்.

அந்த அறிக்கையில் கூறியிருப்பதாவது:-

அகிலஇந்திய பார்வர்ட் பிளாக் தமிழ்நாடு மாநில தேர்தல்குழு சென்னையில் கூடி நெல்லை அருப்புக் கோட்டைசட்டமன்ற தேர்தல் பற்றி ஆலோசித்து கீழ்க் கண்ட முடிவினை எடுத்துள்ளது

அகில இந்திய பார்வர்ட் பிளாக் கட்சி அருப்புக் கோட்டை திருநெல்வேலி சட்டமன்ற இடைத் தேர்தலில் அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழக வேட்பாளர்களை ஆதரிக்கும் அனைத்திந்திய அண்ணா தி.மு கழக வேட்பாளர்களின் வெற்றிக்காக அகிலஇந்திய பார்வர்ட் பிளாக் தொண்டர்கள் அயராது பாடுபட வேண்டும் என தேர்தல் குழு கேட்டுக் கொள்கிறது.

இவ்வாறு அந்த அறிக்கையில் கூறப்பட்டுள்ளது.

## அமைச்சர் நல்லுசாமி பங்கேற்ற சமபந்தி

சென்னை, ஆக. 18- திருவல்லிக்கேணி பார்த்தசாரதி கோவிலில் நடந்த சமபந்தி விருந்தில் அமைச்சர் நல்லுசாமி கலந்து கொண்டார். சுமார் 1500பேர் விருந்தில் பங்கேற்றனர்.

## தஞ்சாவூர் மாவட்டம்: 10 லட்சம் ஏக்கர் சம்பா பயிர் சாகுபடி

தஞ்சாவூர், ஆக. 18- தமிழகத்தில நல்ல பருவ மழை துவங்கியிருப்பதால தஞ்சாவூர் மாவட்டத்தில் சுமார் 10லட்சம் ஏக்கர் நிலப்பரப்பில் சம்பாவில் சாகுபடி செய்ய வாய்ப்பு ஏற்பட்டுள்ளது.

தமிழகத்தில் தற்போது பருவ மழை நல்ல முறையில துவங்கியிருக்கிறது. நீர் தேக்கங்களும்கொஞ்சம் கொஞ்சமாக நிரம்பி வருகின்றன. மேட்டூர் அணையிலும் இது வரை 92 அடி உயரம் நீர் வந்துள்ளது. விரைவில் மேட்டூர் அணையிலிருந்து பயிர் சாகுபடிக்காக நீர் திறந்து விடப்படும் என்றும் எதிர்பார்க்கப்படுகிறது.

இதைத் தொடர்ந்து தஞ்சை விவசாயிகள் குறுகிய காலப்பயிர் வகைகளை தவிர்த்து சம்பா பயிரை சாகுபடி செய்ய வாய்ப்பு உள்ளதாக வேளாண்மை மற்றும் பொதுப்பணித்துறை அதிகாரிகள் ஆலோசனை கூறியுள்ளனர்

தற்போது ஹெக்டேருக்கு 3.3டன் நெல்தான் கிடைக்கிறது ஆனால் இந்த ஆண்டு பருவ மழை சிறப்பாக இருக்கும் என்ற காரணத்தால் ஹெக்டேருக்கு சராசரி சுமார் 4டன் நெல் மகசூல் கிடைக்க வாய்ப்பு உள்ளது என்றும் அதிகாரிகள் கூறியிருக்கிறார்கள்.

முறை நடவுப் பணிகளை தொடங்கி விவசாயம்செய்தால் அதிக கண்டுமுதல் ஏற்படும் என தமிழக அரிசி ஆராய்ச்சி நிலையத்தைச் சேர்ந்த விஞ்ஞானிடாக்டர் கே சுப்ரமணியம் தெரிவித்திருக்கிறார்.

குறுகிய காலப பயிரான குறுவை சாகுபடியையே பெரும்பான்மை விவசாயிகள் நடத்துகிறார்கள். ஆனால் இந்த ஆண்டு சம்பா பயிரை சாகுபடி செய்வது விவசாயிகளுக்கு நல்ல பயன் அளிக்கும் நாற்று விடுவது முறையானஇடைவெளிவிட்டு நடுவது, நீர் பாய்ச்சுவதுஉரமிடுதல் முதலியவற்றை முறையாக செய்ய வேண்டும் என்றும் அவர் கேட்டுள்ளார்.

சுமார் 10 லட்சம் ஏக்கர் நிலப்பரப்பில்இந்த ஆண்டு தஞ்சை மாவட்ட விவசாயிகள் சம்பா பயிரைசாகுபடி செய்ய வாய்ப்பு ஏற்பட்டுள்ளது

ஐ ஆர். 23, சி. ஓ 43 ரக நெல்களை பயிர் செய்வது நல்ல பயன் அளிக்கும் என்றும் தெரிவிக்கப்பட்டுள்ளது குறுவை நெல் பயிர் செய்வதை இந்த ஆண்டு விவசாயிகள் தவிர்ப்பதுமே நல்லதுதான என்றும் அவர் கூறினார்.

## பாரி வள்ளல்

வாராந்திர பரிசுச் சீட்டு குலுக்கல் முடிவுகள்

13-வது "பாரிவள்ளல்" வாராந்திர குலுக்கல் முடிவுகள்
நாள்: 17—8—1986
இடம்: ஸ்ரீபார்த்தசாரதி சுவாமி சபா, திருவல்லிக்கேணி. சென்னை-600 005

முதல்பரிசு ரூ. 1,00,000 (எல்லா வரிசைக்கும் பொது)
ஏஎல் 147595

ஆறுதல் பரிசு ரூ. 1000 (இரண்டு பரிசுகள்)
ஏகே 147595
ஏஎம் 147595

இரண்டாம் பரிசு:ரூ.5,000 (3 பரிசுகள்— வரிசைக்கு ஒன்று வீதம்)
ஏகே333936 ஏஎல்383606
ஏஎம் 200142

மூன்றாம் பரிசு ரூ. 1,000 (45 பரிசுகள்- கீழ்க்கண்ட ஆறு எண்களில் முடியும் எல்லாபரிசுசீட்டுகளுக்கும்)

| | | |
|---|---|---|
| 137277 | 140287 | 208998 |
| 288887 | 346594 | 188692 |
| 114788 | 253760 | 354235 |
| 392340 | 113601 | 266597 |
| 67663 | 307243 | 397893 |

நான்காம் பரிசு: ரூ. 500 (90 பரிசுகள்— கீழ்க்கண்ட கடைசி ஐந்து எண்களில்முடியும்எல்லாபரிசுச் சீட்டுகளுக்கும்)

| | | |
|---|---|---|
| 57315 | 29476 | 79045 |
| 78307 | 49354 | 85534 |
| 21517 | 51619 | 93093 |
| 55234 | | |

ஐந்தாம் பரிசு: ரூ.50 (900 பரிசுகள்— கீழ்க்கண்ட கடைசி நான்கு எண்களில் முடியும் எல்லா பரிசுச் சீட்டுகளுக்கும்)

| | | | |
|---|---|---|---|
| 8645 | 4003 | 9372 | 7676 |
| 4902 | 9528 | 2643 | 4590 |
| 0214 | 3424 | | |

ஆறாம்பரிசு ரூ. 20 (900 பரிசுகள்- கீழ்க்கண்ட கடைசி நான்குஎண்களில் முடியும் எல்லா பரிசுச் சீட்டுகளுக்கும்)

| | | | |
|---|---|---|---|
| 9798 | 2881 | 6890 | 2142 |
| 4343 | 4609 | 8438 | 7367 |
| 7220 | 4658 | | |

ஏழாம் பரிசு:ரூ. 10 (9000 பரிசுகள் — கீழ்க்கண்ட கடைசி மூன்று எண்களில் முடியும் எல்லா பரிசுச் சீட்டுகளுக்கும்)

| | | | | |
|---|---|---|---|---|
| 069 | 107 | 246 | 394 | 483 |
| 545 | 672 | 751 | 805 | 937 |

எட்டாம் பரிசு: ரூ. 5 (9000 பரிசுகள்—கீழ்கண்ட கடைசி மூன்று எண்களில் முடியும் எல்லாபரிசுச்சீட்டுகளுக்கும்)

| | | | | |
|---|---|---|---|---|
| 018 | 198 | 269 | 333 | 451 |
| 568 | 643 | 745 | 811 | 901 |

விற்பனையாளர்களுக்கு மேற்கண்ட எண்களில் முடியும் பரிசுசீட்டுகளின் அடிக்கட்டைகளுக்கு விற்பனையாளர் பரிசாக ரூ. 5 வழங்கப்படும்.

பரிசுத் தொகை பெற விண்ணப்பிக்க வேண்டிய கடைசி நாள்:
அரசு கருவூலங்களில் 14-11-86 இயக்குநர் அலுவலகத்தில்: 12-2-87

அடுத்த சாதாரண குலுக்கல் 26-8-86 அன்று சென்னையில் நடைபெறும்

சாதாரண பாரிவள்ளல் பொன்மாரி மற்றும் தீபாவளி சிறப்புக் குலுக்கல் பரிசுச் சீட்டுகளும் விற்பனையில் உள்ளன.

இயக்குநர்
தமிழ்நாடு பரிசுச்சீட்டு
சென்னை-



## இந்திய அரசாங்கம் தொழில் அமைச்சகம்

பொதுத் துறை நிறுவனங்கள் இலாகா.

டிரான்ஸ்பார்மர்&ஸ்விட்சுகியர் லிமிடெட்டிற்கான தொகைகள் பட்டுவாடா செய்யும் ஆணையர் அலுவலகம்.

19, முதன்மாடி கிரீம்ஸ் ரோடு
சென்னை—600006
தொலைபேசி: 476545

1983-ம் ஆண்டு (1983 ம் வருட 41 வது) சட்டத்தின் கீழ் (நிறுவனங்களை கையகப் படுத்துதல் மற்றும் மாற்றுதல்) டிரான்ஸ் பார்மா ஸ்விட்சுகியர் நிறுவன விஷயமாக; டிரான்ஸ்பார்மா&ஸவிட்சுகியர் லிமிடெட்டிற்காக தொகைகள் பட்டுவாடா செய்யும் ஆணையர் முன்னர் கிளெய்ம்கள் (claims) அளிப்பதற்கான சான்றுகளை அளிக்க கோரும் அறிவிப்பு.

சென்னை டிரான்ஸ்பார்மர் & ஸ்விட்சுகியர் லிமிடெட் நிறுவனம், மேற்கண்ட சட்டத்தின் ஷெட்யூல் இனம் I&IIன் படிகையகப்படுத்தப்பட்டுமேற்கண்ட நிறுவனத்தில தொகைகள் பட்டுவாடா செய்யும் ஆணையர் முன்னர் மேற்கண்ட சட்டப்படி தங்களுக்கு சேரவேண்டிய தொகைகள் பெறக்கோரும் [PREFERRED CLAIMS] அனைவருக்கும் அறிவிப்பதாவது;—

மேற்கண்ட சட்டத்தின் செக்ஷன் 20ல் துணை விதி (1)ல் அளிக்கப்பட்டுள்ள அதிகாரத்தின் படியும் அதனை அமல் செய்வதற்கான தேதியை ஆணையர் அவர்கள் 1986 செப்டம்பர் 15ம் தேதியை நிர்ணயித்துள்ளார்கள. இந்த குறிப்பிட்ட தேதியன்றோ அல்லது அதற்கு முன்னதாகவோடிரான்ஸ்பார்மா ஸ்விட்சுகியர் லிமிடெட்டின் இனம் I இனம் IIன் (Category i ii) கீழ் தங்களுக்கு சேர வேண்டிய தொகைகளுக்காக ஏற்கனவே கிளெய்ம் செய்துள்ளவர்கள் அதற்கான சான்றுகளை (proof) டிரான்ஸ்பார்மா & ஸ்விட்சுகியர் லிமிடெட்டின் தொகைகள் பட்டுவாடா ஆணையர் அவர்களின் முன்னிலையில் சென்னை—600006 கிரீம்ஸ் சாலை எண் 19 முதன் மாடி விலாசத்தில் எல்லா அலுவலக நாட்களிலும் காலை 9-30 மணி முதல் மாலை 5-30 மணிக்குள் அளிக்கவேண்டும்

இனம் I & II-ன் கீழ தங்கள் கிளெய்ம்களுக்கான சான்று (Proof OF Claims) களை 1986 செப்டம்பர் 15-ம தேதியன்றோ அல்லது அதற்கு முன்னதாகவோ செலுத்த தவறும் நபர்கள் (CLAIMANT) மேற்கண்ட சட்டத்தின் செக்ஷன் 20. துணை செக்ஷன் 3)ன் கீழ் தொகைகள் பட்டு வாடா செய்யும் ஆணையர் அவர்களின் பட்டுவாடா பட்டியலிலிருந்து நீக்கப்படுவார்கள்.

இது 1986, ஜூலை 29ம் தேதியன்று என்னுடைய முத்திரை மற்றும் கையொப்பத்தின் கீழ அளிக்கப்படுகின்றது

M K PRASAD,
Commissioner of Payments for Transformer & Switch gear Ltd
Phone: 381377 Delhi



Edited and Published by K.RAVINDRAN on behalf of Thangamani Pubilications and Printed by All India Anna D M KPer arignar Anna Trust Press at 34, Nelson Manickam Road, Madras - 29

தமிழ்நாடு அரசு
பொதுப் பணித் துறை

மின் பொறியாளர் அலுவலகம், பொதுப்பணித் துறை மின்சாரம் (ஸ்பெஷல் பில்டிங்) டிவிஷன் சென்னை-600005

# டெண்டர் நோட்டீஸ்

தமிழ்நாடு அரசு ஆளுநர் அவர்கள் சார்பில் அவர்களுக்காக, மின் பொறியாளர் அலுவலகம் பொதுப்பணித்துறை, மின்சார (ஸ்பெஷல்பில்டிங்ஸ்) டிவிஷன், சேப்பாக்கம், சென்னை-600005 அவர்களால் கீழ் காணும் வேலைகளுக்கான முத்திரையிட்ட டெண்டர்கள் கீழ்குறிப்பிடப்பட்டுள்ள தேதிகளில் பிற்பகல் 3 மணிவரை பெற்றுக்கொள்ளப்பட்டு அதே தினம் பிற்பகல் 3.30 மணிக்கு மின்சார பொறியாளர் (ஸ்பெஷல் பில்டிங்ஸ்) சென்னை-600005 அவர்களால் திறக்கப்படும்.

| வ. எண் | அளவு | விவரங்கள் | டேவணித் தொகை டெபாசிட் |
|---|---|---|---|
| **பாகம் A** | | **வேலைகள்: (போரம் ஒப்பந்தம்)** | |
| 1. | — | சென்னை-600048 வண்டலூரில் உள்ள அறிஞர் அண்ணா உயிரியல் பூங்காவிற்கு H.T. சப்ளை அளித்தல். | வெற்றி பெற்ற டெண்டர்தாரரிடமிருந்து தொகை வசூலிக்கப்படும் |
| 2. | — | சென்னை-600025 கிண்டியிலுள்ள நெடுஞ்சாலை ஆராய்ச்சி நிலையத்திற்கு H.T. சப்ளை அளித்தல் | -Do- |
| 3. | — | சென்னை-600025 கிண்டியிலுள்ள மெஷினரி ஒர்க் ஷாப் மற்றும் டிரான்ஸ்போர்ட் ஆகியவற்றிற்கு பவர் மெயின்கள் மற்றும் மின்சார இணைப்புகள் புதுப்பித்தல், மின்சார ஒயர்கள் மாற்றுதல் | ரூ.3110/- |
| **பாகம் B** | | **பொருட்கள் சப்ளை செய்தல்** | |
| 4. | 890 எண்ணிக்கை | 125 வாட்கள் HP, MV. விளக்குக்கு பொருத்தமான பறக்கும் தட்டு அமைப்புள்ள கம்பம (Top Lantern Luminaire) | ரூ.7800/- |
| 5. | 20 எண்ணிக்கை | 250 வாட்கள் HP SV விளக்கு பிரகாசமாக எரிய கூடியதற்கு தகுந்த சோடியம் வேப்பர் லாம்ப் தெரு விளக்கு | ரூ 440/- |
| 6. | 75 எண்ணிக்கை | 900 RPM ஸிங்கிள் பேஸ் உடன் கூடிய 48" ஏஸ் எக்ஸாஸ்ட் மின் விசிறி | ரூ 860/- |
| 7. | 3 KMS | I S I முத்திரையுடன்கூடிய அலுமினிய கடத்திகளால் மூடப்பட்ட PV LT UG 70 சதுரமிமீ கேபிள் | ரூ.670/- |
| 8. | 4 KMS | ஐ.எஸ்.ஐ முத்திரையுடன் கூடிய அலுமினியத்தினால் மூடப்பட்ட கோர் 3½ கோர் 185 சதுமிமீ PVC LT UG | ரூ.5900/- |
| 9. | 500 MTS | ஐ.எஸ்.ஐ. முத்திரையுடன் கூடிய அலுமினியத்தினால் மூடப்பட்ட கேபிள் 3½ கோர் 400 சதுமிமீ PVC LT UG | ரூ.1600/- |

பாகம் A

டெண்டர் விற்பனைக்கான இறுதிதேதி: 9-10-1986

டெண்டர் பத்திரங்கள் நேரில் பெற்றுக்கொள்வதற்கான இறுதிதேதி: 10-10-1986

பாகம் B

டெண்டர் விற்பனைக்கான இறுதிதேதி: 22-9-1986

டெண்டர் பத்திரங்கள் நேரில் பெற்றுக்கொள்வதற்கான இறுதிதேதி: 25-9-1986

டெண்டர்தாரர்கள் தங்கள் டெண்டர்களை நேரிலோ அல்லது பதிவுத் தபால் மூலமோ அனுப்பலாம். பதிவுத்தபால்மூலம் அனுப்புவதாயின், டெண்டர்கள் இறுதி தேதிக்கு முன்னதாக வந்து சேரும்படி அனுப்ப வேண்டியது டெண்டர்தாரரின் பொறுப்பாகும்.

வரிசை எண்கள் 1 & 2 ஆகியவற்றிற்கான டெண்டர் பத்திரங்கள் E.A. லைசென்ஸ் பெற்ற காண்ட்ராக்டர்களுக்கு மட்டும் வழங்கப்படும்.

வரிசை எண் 3க்கான டெண்டர் பத்திரங்கள் மத்திய, மாநில அரசு இலாகாக்கள் மற்றும் அரசு நிறுவனங்கள், பொதுப் பணித்துறை ஆகியவற்றில் உரிய வகுப்பில் பதிவு செய்துள்ள காண்ட்ராக்டர்களுக்கு மட்டுமே வழங்கப்படும் என்னும் வெற்றி பெற்ற டெண்டர்தாரர், பொதுப்பணித்துறையில் பதிவு பெறாத காண்ட்ராக்டராக இருப்பின் மேற்கண்ட வேலை அவருக்கு அளிக்கப்படுவதற்கு முன்னதாக அவர் தன்னை பொதுப்பணித் துறையின் உரிய வகுப்பில் பதிவு செய்து கொள்ள வேண்டும்.

வரிசை எண்கள் 4 முதல் 9 வரை உள்ளவற்றிற்கான டெண்டர் பத்திரங்கள் தயாரிப்பாளர்கள் மற்றும் புகழ் பெற்ற நிறுவனங்களுக்கு மட்டுமே வழங்கப்படும்.

டெண்டர் பத்திரங்கள் மின்சாரப் பொறியாளர் அலுவலகம், பொதுப் பணித்துறை, மின்சார (ஸ்பெஷல் பில்டிங்ஸ்) டிவிஷன், சென்னை-600005 அவர்களிடம் ரூபாய் 30 - செலுத்துவதற்கான சலானை அளித்து பெற்றுக்கொள்ளலாம். மேற்கண்ட தொகை ரூபாய் 30/-ம் (ரூபாய் முப்பதுமட்டும்) ஸ்டேட் பாங்க் ஆப் இந்தியாவின் சென்னை கிளையில் ஆயிரம் விளக்கு கிளையில் 882 - Cash Remittances Adca 0000 Dpc Pm 0111 PW II other Remittances தலைப்பில் டெண்டர் குறிப்புகளுக்கும் "04 General Sales Tax" என்ற தலைப்பில் ரூ 1.65 (ரூபாய் ஒன்று பைசா அறுபத்தைந்து) மின்சார பொறியாளர் பொதுப்பணித்துறை, மின்சார (ஸ்பெஷல் பில்டிங்ஸ்) டிவிஷன், சேப்பாக்கம் சென்னை-600005 அவர்கள் சார்பில் செலுத்த வேண்டும்.

சென்னை நகருக்கு வெளியேயுள்ள காண்ட்ராக்டர்கள் நிறுவனங்கள் ரூ31.95 (ரூபாய் முப்பத்தொன்று பைசா அறுபத்தைந்துக்கு) டிமாண்ட் டிராப்ட், மின்சாரப் பொறியாளர் பொ.ப.து. மின்சார (ஸ்பெஷல்பில்டிங் டிவிஷன் சென்னை 600005 அவர்கள் சார்பில் ஏதாவது எடுத்த மயமாக்கப்பட்ட வங்கியிலிருந்து எடுத்து அனுப்ப வேண்டும்.

டேவணித் தொகையை ஏதாவது ஒரு பாதுகாப்பு பத்திரமாக (பாங்கியரண்டி நீங்கலாக) சிறு சேமிப்பு டெபாசிட்டுகளுக்குட்பட்ட பெற்றுக்கொள்ளப்படும் எனினும் குறுகிய கால செக்யூரிட்டிகள், டெண்டர் முடிவு செய்யப்படும் காலம் வரை செல்லுபடியாகக் கூடியதாக இருக்கவேண்டும்.

எவ்வித காரணமும் காட்டாமல் எந்த ஒரு டெண்டரையோ அல்லது எல்லா டெண்டர்களையுமே நிராகரிக்க கீழ் கையொப்பமிட்டவருக்கு பூரண உரிமை உண்டு.

மின்சாரப் பொறியாளர்
பொதுப் பணித் துறை

DIPR 34093-86-Chari

## வாய்க்கால் வெட்ட அமைச்சரிடம் கோரிக்கை

சென்னை, ஆக. 18— சேலம் மாவட்டம் ஆத்தூர் வட்டம் தெடாவூர் சுவேத நதியிலிருந்து நாவலூர் ஏரிக்கு வாய்க்கால் வெட்ட வேண்டும் என்று அமைச்சர் பூசு பிடம் விவசாயிகள் சார்பில் கோரிக்கை வைக்கப்பட்டது.

இந்த வாய்க்கால் வெட்டுவதால் நாவலூர் ஏரிக்கு தண்ணீர் வரத்து அதிகமாகும். இதன் மூலம் வேப்பலூர் இலுப்பநத்தம் மற்றும் சுற்று வட்டார மக்கள் பயனடைவர்.

இந்த கோரிக்கையை அமைச்சரிடம் சேலம் மாவட்டச் செயலாளர் கே.பி. செல்வராசு புத்தூர் ஊராட்சி மன்ற தலைவர் பின்னர் ராசேந்திரன் மற்றும் ஆத்தூர் பிரமுகர்கள் அளித்தனர்.

கோரிக்கையை பெற்றுக் கொண்ட அமைச்சர் பூசுய் புரட்சித்தலைவர் அனுமதியுடன் இக்கோரிக்கை நிறைவேற்றப்படும் என்றார்.

# கோதாவரி ஆற்றில் வெள்ளம்: கிராமங்கள் நீரில் மிதக்கின்றன

## வெள்ளப் பகுதிகளில் மத்தியக் குழு

ஐதராபாத் ஆக. 18— ஆந்திர மாநிலத்தில் கோதாவரி ஆற்றில் வெள்ளம் பெருக்கெடுத்து ஓடுகிறது.

இதனால் சுமார் 10 லட்சம் பேர் பாதிக்கப்பட்டுள்ளனர். மீட்புப் பணிகள் தொடர்ந்து நடக்கின்றன.

ஆந்திர மாநிலத்தில் பலத்த மழை பெய்ததால் கோதாவரி ஆற்றில் பெரும் வெள்ளம் ஏற்பட்டது. மேற்கு, கிழக்கு கோதாவரி மாவட்டம் பெரும் அளவில் பாதிக்கப்பட்டது போலாம் பகுதியில் கோதாவரி ஆற்றின் அணை உடைந்ததால் வெள்ளம் பக்கத்தில் உள்ள நகரங்கள் மற்றும் கிராமங்களுக்குள் புகுந்தது. ஆற்றின் இரு பக்கத்திலும் சுமார் 150 கிலோ மீட்டர் தூரத்துக்கு ஒரே வெள்ளக் காடாக காட்சி அளிக்கிறது.

மேற்கு- கிழக்கு கோதாவரி மாவட்டம் உள்பட பல பகுதிகளில் தகவல் தொடர்பு துண்டிக்கப்பட்டு விட்டது. போக்குவரத்தும் அறவே துண்டிக்கப்பட்ட நிலையில் நிவாரண வேலைகள் நடக்கின்றன.

ராஜமுந்திரி பகுதியில வெள்ளத்தின் உயரம் சுமார் 6 5 மீட்டருக்கும் அதிகமாகவே இருந்து வருகிறது.

### 10 லட்சம் மக்கள் பாதிப்பு

தவலீஸ்வரம், ராஜமுந்திரி ஆகியவை முதலிய பகுதிகளில் பொதுமக்கள் வீட்டின் கூரைகள், மற்றும் மரங்களின் உச்சியில் உட்கார்ந்தவண்ணம் உள்ளனர்.

முடிந்தவரையில் படகுகளில் மக்கள் வெள்ளத்தை கடந்து செல்லுகிறார்கள். கப்பற்படையைச் சேர்ந்த 3ஆயிரத்துக்கும் மேற்பட்டவர்கள் வெள்ளப்பாதிப்பு பகுதிகளில் மீட்புப்பணியில் ஈடுபட்டுள்ளனர்.

வெள்ளத்தால் சுமார் 10 லட்சத்துக்கும் மேற்பட்டவர்கள் பாதிப்புக்குள்ளாயிருக்கிறார்கள். மேலும் 4 ஹெலிகாப்டர் விமானங்கள் ஆவ்ரோ விமானங்கள் ஆகியவற்றை அனுப்புமாறு ஆந்திர அரசு ராணுவ அதிகாரிகளுக்கு கோரிக்கை அனுப்பியுள்ளது.

தற்போது கப்பற்படையைச் சேர்ந்த 3 ஹெலிகாப்டர் விமானங்கள் உட்பட 8 ஹெலிகாப்டர் விமானங்கள் மீட்புப்பணிகளில் ஈடுபட்டுள்ளன.

வெள்ளத்தால் 6 லட்சம் ஹெக்டேர் நெல்வயல் சேதம் அடைந்தது இது வரை 3 லட்சத்துக்கும் மேற்பட்டவர்கள் பாதுகாப்பான இடங்களுக்கு அழைத்துச் செல்லப்பட்டனர்.

சுமார் ஆயிரத்து 500 கிராமங்கள் வெள்ளத்தால் சூழப்பட்டுள்ளன. கால்நடைகளும் வெள்ளத்தில் அடித்துச் செல்லப்பட்டன.

முதல்வர் என் டி ராமராவ் வெள்ளப் பகுதிகளை ஹெலிகாப்டர் விமானத்தில் சென்று பார்வையிட்டார்.

### மத்தியகுழு வருகை

வெள்ளம் வடியத் தொடங்கியுள்ளதால் நிலைமை கட்டுக்குள் இருப்பதாக அவர் கூறினார்.

இம்மாதம் இறுதிக்குள் அறிக்கை சமர்ப்பிக்கப்படும் என்றும் அவர் தெரிவித்தார்.

வெள்ளப் பகுதிகளை பார்வையிட்டு சேதங்களை கணக்கிட பிரதமர் ராஜீவ் காந்தியின் செயலாளர் சரளா கிரேவால் தலைமையில் மத்தியக் குழு ஐதராபாத் வந்துள்ளது பிரதமர் ராஜீவ் காந்தியை முதல்வர் ராமராவ் ஆந்திர மாநிலத்துக்கு வந்து வெள்ளப் பாதிப்பு பகுதிகளை பார்வையிடுமாறு கேட்டுக் கொண்டுள்ளார்.

மீட்புப்பணிகள் துரிதமாக நடக்கின்றன.

## டிராபிக்குற்றங்கட்கு அபராதம் கட்ட புதிய முறை

சென்னை ஆக. 18— போக்குவரத்து குற்றங்களுக்கு அபராதம் கட்ட வேண்டுமானால் இது வரை கோர்ட்டில் தான் கட்ட வேண்டும்.

இப்போது வரும் 16ந் தேதிமுதல் புதியமுறை அறிமுகப்படுத்தப்படுகிறது. இதன்பின் போக்குவரத்தை மீறியதற்காக தண்டிக்கப்படுபவர்கள் பூந்தமல்லி சாலையிலுள்ள போக்குவரத்து துணைகமிஷனர் அலுவலகத்தில் இனி அபராத தொகையை கட்ட வேண்டும்.

## டெல்லியில் கழகக்கிளை திறப்புவிழா

புதுடெல்லி ஆக 18— புதுடெல்லியில் ஆர். கே புரம் வசந்த்விகார் ஆகிய இரண்டு இடங்களில் கழகக் கிளையை நாடாளு மன்ற உறுப்பினர் குழந்தைவேலு தொடங்கி வைத்தார். இரண்டு கிளைகளிலும் 1000க்கும் மேற்பட்டவர்கள் உறுப்பினர்களாகச் சேர்ந்தனர்.

இந்தநிகழ்ச்சியில் கலந்து கொண்டு குழந்தைவேலு எம்.பி. சிறப்புரை ஆற்றினார். டெல்லியில் இன்னும் பல இடங்களில் கழகக்கிளைகள் துவக்கப்படும் என்று குழந்தைவேலு குறிப்பிட்டார்.

செயலாளர்கள் கோவிந்தராஜ், அறிவாளன் மற்றும் அண்ணாதுரை, எம். கே. செல்வராசு அர்ஜுனன், மனோகரன் வடிவேலு மற்றும் கழக நிர்வாகிகள் ஆகியோர் கலந்து கொண்டனர்.

## வரி விளம்பரம்

R.V.N. டிராவல்ஸ் வீடியோ கோச்

R.V.N.&BROS சென்னை to தூத்துக்குடி செல்ல தினசரி மாலை 5 மணிக்கு டீலக்ஸ் கோச் பஸ் புறப்படும்.

புதுக்கோட்டை, காரைக்குடி, தேவக்கோட்டை, திருவாடானை, தொண்டி. தினசரி 8-30 மணிக்கு புறப்படும் எழும்பூர் ரெயில்வே ஸ்டேஷன் எதிரில் சென்னை 8- கிளை: வெல்கம் டிராவல்ஸ் தூத்துக்குடி.

# வீட்டுவசதி வாரிய புதிய வீடுகள்: உடனடி ஒதுக்கீடு

சென்னை, ஆக. 18— வீட்டு வசதி வாரிய புதிய வீடுகள் ஒதுக்கீடு செய்வதில் தாமதம் ஏற்படுவதாக வந்த பத்திரிகை செய்திக்கு வீட்டு வசதி வாரிய செயலாளர் மறுப்பு தெரிவித்துள்ளார். உடனுக்குடன் வீடுகள் ஒதுக்கீடு செய்யப்படுவதாகவும் அவர் கூறியுள்ளார்.

இது குறித்து வீட்டுவசதி வாரிய செயலாளர் தமது மறுப்பு அறிக்கையில் கூறி இருப்பதாவது:-

அரசாங்கத்தினால் உரிய நேரத்தில் முடிவுகள் எடுக்கப்படாததால் வீட்டு வசதி வாரியம் கட்டிய ஏராளமான வீடுகள் ஒதுக்கீடு செய்யப்படாமல் காலியாக உள்ளன என்ற தவறான கருத்தை 14-8-86 இந்தியன் எக்ஸ்பிரஸில் வந்த செய்தி தருகிறது.

இது உண்மைக்குப் புறம்பானது. அரசால் ஒதுக்கீடு செய்யப்படுவதில் தாமதம் ஏதும் இல்லை. ஒதுக்கீட்டுக்கான குலுக்கல் முடிந்து வாரியத்திலிருந்து தகவல் வந்தவுடன் அரசு ஒதுக்கீடு பற்றிய முடிவுகள் உடனுக்குடன் எடுக்கப்படுகின்றன. ஒதுக்கீடுதாரர்கள் முன்பணம் கட்டுவதில் ஏற்படும் தாமதத்தாலோ அல்லது வீடுகளை எடுத்துக் கொள்வதில் ஏற்படும் தாமதத்தாலோ சில இடங்களில் வீடுகள் காலியாக இருக்க வாய்ப்புள்ளது.

சில பகுதிகளில் எதிர்பார்த்த அளவு தேவைகள் இல்லாமல் இருக்கலாம். இந்த இடங்களில் வீடுகளை விற்பதற்கு ஏற்ற வகையில் முன்வைப்புத் தொகையைக் குறைத்தல், தவணை காலத்தை நீட்டித்தல் முதலிய பல்வேறு முறைகளைக் கையாண்டு வீடுகளை ஒதுக்கீடு செய்வதற்கான எல்லாவிதமான ஏற்பாடுகளும் செய்யப்படுகிறது. வாரியத்தின் ஜூலைத் திங்கள் கூட்டத்தில் இது விசயமாக விரிவாக ஆராயப்பட்டு தேவையான முடிவுகள் எடுக்கப்பட்டுள்ளன. இதன் விளைவாக எல்லா வீடுகளும் மூன்று அல்லது நான்கு மாத காலத்துக்குள் ஒதுக்கீடு செய்யப்பட்டுவிடும்.

### புதிய திட்டம்

எதிர்காலத்தில் தேக்க நிலை ஏற்படுவதை தடுக்கும் பொருட்டு முன்பதிவு முறையில் தேவையைக் கணிப்பதற்கு வழிவகை செய்யப்பட்டுள்ளது. இந்த முறையில் திட்டம் ஆரம்பிப்பதற்கு முன்பே தங்களுடைய தேவைகளை ஒரு குறிப்பிட்ட முன்பணம் செலுத்தி பதிவு செய்ய வேண்டும்.

தேவைக்கேற்ற அளவில் திட்டம் செயல்படுத்தப்படும். ஒதுக்கீட்டாளர்களை திட்டம் ஆரம்பிப்பதற்கு முன்பே தெரிவு செய்யப்பட்டுவிடும். இந்த முறையில் வீடுகள் கட்டி முடிக்கப்பட்டவுடனே குடி அமர்த்தும் நிலை ஏற்படும்.

வீட்டு வசதி வாரியம் ஒவ்வொரு ஆண்டும் 16,000க்கும் மேல் வீடுகள் கட்டி, ஒதுக்கீடு செய்வதால், சில சமயங்களில் சில இடங்களில் கட்டி முடிப்பதற்கும் குடி அமர்த்துவதற்கும் இடையே ஒரு சில மாதங்கள் காலதாமதம் ஏற்படுவது தவிர்க்க முடியாததாகும்.

இவ்வாறு அவர் கூறியுள்ளார்.

தமிழ்நாடு அரசு
பொதுப் பணித் துறை

கண்காணிப்புப் பொறியாளர் அலுவலகம், பொதுப் பணித்துறை செங்கற்பட்டு வட்டம், காஞ்சிபுரம்.

# ஒப்பந்த அறிவிப்பு

எண் வஅ/1 கோ.217எ/86/டி3/487 பல நாள் 31-7-86

தமிழ்நாடு ஆளுநர் அவர்களுக்காகவும் மற்றும் அவர் சார்பாகவும் கீழ்க்கண்ட வேலைகளுக்கு முத்திரையிடப்பட்ட ஒப்பந்தப் புள்ளிகள் கண்காணிப்புப் பொறியாளர், செங்கற்பட்டு வட்டம் காஞ்சிபுரம் [பின். 631501] அவர்களால் 2—9—86 பிற்பகல் 3.00மணி வரை பொதுப் பணித் துறை மற்றும் பிற துறைகளில் பதிவு பெற்ற ஒப்பந்தக்காரர்களிடமிருந்து பெற்றுக் கொள்ளப்படும். 5—9—86 அன்று 3.00 மணிக்கு ஒப்பந்தப்புள்ளிகள் பொதுப்பணித் துறை செங்கற்பட்டு வட்டம் கண்காணிப்புப் பொறியாளரால் திறக்கப்படும்.

ஒப்பந்தப் படிவம்: மொத்த தொகை

| வ. எண் | வேலையின் பெயர் | முன் வைப்புத்தொகை | ஒப்பந்தப் புள்ளி இட தகுதி வாய்ந்த ஒப்பந்தக்காரரின் தகுதி | பணி முடிக்க நிர்ணயம் செய்யப்பட்ட காலம் | ஒப்பந்தப் புள்ளிகள் பெற்றுக் கொள்ளப்படும் முடிவுதேதி | ஒப்பந்தப் புள்ளிவிற்பனைக்கு கிடைக்கும் காலம் | முன் வைப்புத் தொகை மற்றும் ஒப்பந்தப் புள்ளியின் தொகை கட்டப்பட வேண்டிய கணக்குடைய செயற் பொறியாளர் |
|---|---|---|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 |
| | | ரூபாய் | | | | | |
| 1. | செங்கை மாவட்டம்-சைதை வட்டம்-வேளச்சேரி ஏரியின் முழுநீர் மட்ட அளவை 4 அடி குறைத்தல். | 4000 - | வகுப்பு இரண்டும் அதற்கு மேலும் | நான்கு மாதங்கள் | 2-9-86 | 18—8—86 முதல் 29—8—86 | செயற்பொறியாளர், பொ. ப. து. சைதை கோட்டம், சென்னை— 5. |
| 2. | செங்கை மாவட்டம்-திருவள்ளூர் தாலுகா வெள்ளத்தினால் பாதிக்கப்பட்ட அரணவாயில் அணைக்கட்டு திரும்ப நிர்மாணித்தல். | 19200/- | முதல் வகுப்பு | பதினெட்டு மாதங்கள் | 2-9-86 | 18—8—86 முதல் 29—8—86 | செயற்பொறியாளர், பொ. ப. து. வெள்ள நிவாரண கோட்டம், 52/1 காஸிஎஸ்டேட் ஜாபர்கான் பேட்டை, சென்னை—95 |
| 3. | செங்கை மாவட்டம்-உத்திரமேரூர் வட்டம்-உத்திரமேரூர் வரவுகால் வாயில் சிலாம்பாக்கம் அருகே பாலம் கட்டுதல் | 2100/- | வகுப்பு இரண்டும் அதற்கு மேலும் | நான்கு மாதங்கள் | 2-9-86 | 18—8—86 முதல் 29—8—86 | செயற்பொறியாளர், பொ. ப. து. காஞ்சிபுரம் கோட்டம். காஞ்சிபுரம் |

1. ஒப்பந்தபுள்ளியின் விலை மற்றும் விற்பனை வரி மற்றும் சர்சார்ஜ் ஒவ்வொரு பணிக்கும் ரூபாய். 50 00+2 50+0 25 கீழ்கண்ட கணக்கில் செலுத்த வேண்டும். இத்தொகை எக்காரணத்தைக் கொண்டும் திருப்பித் தரப்பட மாட்டாது.

ஒப்பந்தப்புள்ளியின் விலைக்கணக்கு:

882 Cash Remittance Pw III Other Remittance (b) Items adjustable by P.W.D. D.P.Code No.8820 AC AD 0005 (To the Credit Of Executive Engineer Concerned)

விற்பனை வரி மற்றும் சர்ச்சார்ஜ் கணக்கு.

040 Sales Tax-B Recejpt General Sales Tax b. Misc. D. P. Code 040 ABAA010.

2. தபாலில் அனுப்பப்படும் ஒப்பந்தப்புள்ளி கால தாமதமானாலோ தொலைந்துவிட்டாலோ கண்காணிப்புப் பொறியாளர் எந்தவிதத்திலும் பொறுப்பேற்க முடியாது.

3. காஞ்சிபுரம் பொதுப்பணித்துறை, செங்கற்பட்டு வட்டம், கண்காணிப்புப் பொறியாளர் எக்காரணமும் கூறாமல் எந்த ஒப்பந்தப்புள்ளியையோ அல்லது அனைத்து ஒப்பந்தப்புள்ளிகளையுமோ நிராகரிக்க முழு உரிமை பெற்றவராவார்.

4. மூன்று பணிகளுக்கான ஒப்பந்தப்புள்ளிகளையும் இதர விவரங்களையும் காஞ்சிபுரம் செங்கற்பட்டு வட்டம் பொ. ப. து., கண்காணிப்புப் பொறியாளர் அலுவலகத்திலும் முதல் பணிக்கான ஒப்பந்தப்புள்ளி மற்றும் இதர விவரங்களையும் சென்னை-5 சைதை கோட்டம் செயற்பொறியாளர் அலுவலகத்திலும் இரண்டாம் பணிக்கான ஒப்பந்தப்புள்ளி மற்றும் இதர விவரங்களையும் சென்னை-95 ஜாபர்கான்பேட்டை 52/1 காசி எஸ்டேட்டில் உள்ள வெள்ள நிவாரண கோட்ட செயற் பொறியாளர் அலுவலகத்திலும் எல்லா வேலை நாட்களிலும் அலுவலக நேரங்களில் பெற்றுக் கொள்ளலாம்.

5. ஒப்பந்தப்புள்ளிகள் பெறப்படும் நாள் அரசு விடுமுறை தினமாக அறிவிக்கப்பட்டால் ஒப்பந்தப் புள்ளிகள் அதற்கடுத்த வேலை நாளன்று பிற்பகல் 3 மணி வரை பெறப்படும். இதே போன்று ஒப்பந்தப் புள்ளிகள் திறக்கப்படும் நாள் அரசு விடுமுறையாக அறிவிக்கப்பட்டால் அதற்கடுத்த வேலை நாளன்று பிற்பகல் 3.00 மணிக்கு ஒப்பந்தப்புள்ளிகள் திறக்கப்படும்.

கண்காணிப்புப் பொறியாளர்

DIPR/34093/86-2/MAC